# சாவின் முத்தம்

பாடல்கள்



ஸ்டார் பிரசுரம்
பாலக்கரை, திருச்சி

# அறிமுகம்

சிந்திக்காதவன் — குறிக்கோள் இல்லாதவன் கவிஞனாக இருக்கமுடியாது. இது அசைக்கமுடியாத கருத்தாகும்.

இன்றைய தமிழ்நாட்டிலே, சிந்திக்காத—குறிக்கோளற்ற—சொல் வளமற்ற—தமிழ் மரபு, இலக்கணம், இலக்கியம் இவற்றைச் சரிவரத் தெரிந்து கொள்ளாத பெரியார்கள் 'கவிஞர்கள்' என்று உலாவுவதை நாம் கண்டுகொண்டுதானிருக்கிறோம். இந்தவித உளைச் சேற்றிலே தாமரை எனத் தகும் கவிஞர்களும் இருக்கிறார்கள்.

இந்தக் கவிதைகளை இயற்றிய இளைஞர் 'சுரதா' கவியரசர் பாரதிதாசன் அவர்களின் வழித்தோன்றல்: கவிதைப் போக்கில் மட்டுமல்ல; கருத்திலும் கூடத்தான். நண்பர் 'சுரதா,' கவியரசர் அவர்களோடு நெருங்கிய தொடர்புள்ளவர். அந்தச் சாயலே இவர்தம் புலமைக்கு வேர் எனக் கருதுகிறேன்.

வளமான சொற்சுவை—குன்றாத அழகு—இயற்கைக்கு ஏற்ற ஆனால் புரட்சிகரமான கருத்துக்கள்—இன்பந்தரும் காதற்சித்திரங்கள்—புதிய புதிய உவமைகள்—இவை இந்தக் கவிதைத் தொகுதியில் நாம் காணுபவை.

எனக்கு ஒரு மகிழ்ச்சி: மறைவாக இருக்கும் தமிழ்ச்செல்வங்களைப் புத்தக உருவில் தருகின்ற நம் இனிய நண்பர் வி. ஆர். எம். அவர்களைப் பாராட்டவேண்டும்.

10—3—46
சென்னை

— ப. முத்தையா
(முல்லை)

## பொருளடக்கம்

# சாவின் முத்தம்

இமை நெறித்து வானத்தில்
அடுக்கி, கொஞ்சம்
இருள் கிடக்கும் பார்வையிலே
கோணம் வாங்கி,
சுமைக் குடத் துடன்நடந்து
மாந்தோப் போரம்
சென்றிட்டாள் நீலவள்ளி!
வாய் இமைத்து,
" நமை விட்டுப் பிரியாத
அந்தி நேரம்;
நல்ல இசை; பனித்தென்றல்,
இருந்தும், காதல்
குமையாத நெஞ்சத் தான்,
"அத்தான்" இன்னும்
கொத்திட ஏன் வரவில்லை?"
எனத் துடித்து,

நடை யழுங்க நின்றிட்டாள்.
மீண்டும் யாழை
நடத்துகின்ற வாய்திருத்தி
'ஆமாம்' சேரர்
படைத்தலைவன் என் அத்தான்!
சிரிப்பின் ஆழம்
பார்ப்பதற்கு இது நேரம்
அல்ல! நேற்று

உடை பொருத்தி விட்டவளும்
நானே! இன்று
உள்ளத்தால் ஏன் சோகம்
தெளிக்க வேண்டும்?
விடை பெற்று வளர்கின்ற
கொடிகள், கொம்பின்
மேனிருசி பார்க்காமல்
போமோ!" என்று

பிசைந்திட்டாள் எண்ணத்தை
பின்னும் "துன்பம்"
பதம் பார்க்க ஓடிவரும்
அதிர்வாள்! பச்சை
அசைவினிலே கொடிமுல்லை
ஆகி, சற்று
ஆடுவாள்; ஆனந்தம்
வைப்பாள்! மச்சான்
இசைஉலகம் வார்த்தெடுத்து
மணி நிலாவில்
"இந்தாடி தென் குயிலே!"
என உடம்பின்
திசைஎங்கும் பாய்ச்சிடுவான்.
அதற்குள் எந்தன்
சிறு நெஞ்சம் ஏன
கூத்து ஆடவேண்டும்?

எனக் கேட்டாள் தன்மனத்தை.
பறந்தாள் வீடு.

"ஏன் இவ்வளவு நேரம்
இழைத்தாய்?" என்று
வினவினான் அவள் தந்தை.
"அந்தி நேரம்
வெளிப் போக்கு வரத்துக்கு
ஏற்றதல்ல
மனம் சுருட்ட வேண்டுமடி
அம்மா! இன்னும்
மணம் உனக்கு ஆகவில்லை
அதற்குள், என்ன?
இனம் தேடிச் சென்றாயோ!
போடி உள்ளே!
இன்றுமுதல் நடை துவக்கக்
கூடா" தென்று

தாய்எரிந்து மேல் விழுந்தாள்!
மலர்ப்பூங் கோதை
தரை ஊன்றும் விழியினிலே
பனி நிருத்தி
போய் அடைந்தாள் அறைவீடு.
அடுத்த வீட்டுப்
பெண் ஒன்று ஓடிவந்து
"வள்ளி அக்கா!
வேய் மூங்கில் தோள்
அணைந்து அமுதம் உண்ண
விடியலிலே வருவாராம்!
இதழில் முத்தம்

தோய்த்து வெகு ஆண்டாச்சாம்!
இதை உனக்குச்
சொல்லச் சொன்னார் அக்கா"
என்றாள் — துள்ளும்

ஆத்திரத்தில் வாய் உரித்தான்
தந்தை. "என்ன
இப்படியா நீ நடக்க
இசைந்தாய்?" என்று
கோத்தெடுத்தாள் சுடு சொற்கள்
அன்னை, அந்தக்
கொந்தளிப்பில் அவள் மிதக்க,
கொண்டைக் கம்பால்
சாத்துதற்கு விரைந்திட்டான்
அண்ணன். வீட்டில்
தங்குதடை இல்லாமல்
பேசலானார்.
ஊத்தை மூடிக் கழிசடையுங்
கூட, பேச்சு
ஒன்றிருக்க அதை மாற்றிக்
குலைகவாய் காட்டும்.

சாத்திய வாய் திறக்கவில்லை;
வள்ளி. துக்கம்
சாய்த்து நெஞ்சை நனைக்கின்ற
அவளைப் பார்த்து
"தூத்தூத்து!" ஏன் இந்த
விசனம்! குட்டைச்

சமூகத்தார் வாழட்டும்
உன்னைப்போன்ற
மாத்தமிழர் வாழுகின்றார்
இறப்பில், நீயும்
மடிவதுதான் உதயத்தின்
தீர்ப்பு, அங்கே
கோத்தாட நீ போவாய்
"அத்தான்—வீரன்"
குரவமலர்ச் சிரிப்பேந்தி
வருவான்" என்று

அந்தரங்கம் ஓசையிட,
இந்த்ர நீலம்
அடர்ந்தது போல் விஷ
இருட்டுப்பூக்க, வெப்பம்
சிந்துகின்ற கண்கொழித்து
'ஆம், ஆம்' இந்தத்
தீர்ப்பேதான் சரிஎன்று
முணுமுணுத்து
வந்திட்டாள் மரணத்தின்
ஓட்டில்! நஞ்சை
மட்டித்து வாய் குளிர்ந்தாள்
"சாவின் உச்சி"
உந்திற்று விண்ணுக்கு
ஒழிந்த கொள்கை
ஒருசொட்டுக் காட்டிற்றா?
என்ன கோரம்!

# சிரிப்பின் நிழல்!

முல்லையிலே சிரிக்கின்றாள்! வானமென்னும்
முகம்பார்க்கும் கண்ணாடி மேனி எங்கும்
நீலநிறத்துப் பட்டாடை போர்த்து நின்றாள்!
நீலமலர் இதழ்வடிவில் அசைந்து, பச்சைப்
புல இனத்தில் ஒளிகின்றாள்! அருவி யாகிப்
புனல்வழித்துச் சிந்துகின்றாள்! அந்த ரத்து
வில்வளைவில் கூத்திட்டுக் கரும்புத் தோளின்
மணிவரியில் முத்துருவம் அடைகின்றாள்! செங்

கண்ணவிழ்த்து நெளிகின்றாள்! இதழ் வரம்பில்
கதிர்பரப்பி அந்தியினைப் படைத்து, காதல்
உண்ணுகின்றாள். படைக்கருவி முகத்தை ரத்த
ஊற்றாக்கிக் களிக்கின்றாள்! காந்தட் பூவின்
வண்ணத்து இளமைவிரற் கொத்தில், தங்க
மயில்நடனம் வைக்கின்றாள்! உத டிமைத்து,
எண்ணத்தை இசையாக்கி, வானம் பாடி
எடுத்துண்ணும் தூற்றலிலே மணியா கின்றாள்!

தன்நிறத்தை இவ்வுலகப் பொருளின் மேலே
தெளித்துவிடல் வேண்டுமெனும் பெருந்
துடிப்பை

மின்உதயம் சரிக்கின்றாள்! குமரித் தென்றல்
விளைவுஅவள் இதயப்பூந் தோட்டம்! முத்தம்
தின்னுதற்குத் தளிர்க்கின்றாள்! கண்கலைத்துச்
சீர்திருத்தம் உதிர்க்கின்றாள். ஒளிமன் றத்தில்
இன்ன இடம் கலை!கவிதை இதுதான்! காதல்
என்பதுவும் இவ்விடந்தான் எனவி ளக்கிக்

காட்டுகிறாள் பாண்டிநாட் டரசி! ஆலங்
கனிநிறத்து இதழ்ஊன்ற வரும்என்மீது
வாட்டத்துப் பார்வையினை அனுப்புகின்றாள்!
வாரிஉண்ணப் போகையிலே 'தொடாதே' என்று
ஆட்டிவைத்து மறைகின்றாள் மீண்டும் மீண்டும்
அன்புவரும்! இருட்டும்! பின் அமுதம் தந்து
ஊட்டத்தைக் கொடுக்கின்றாள்! அழகு என்னும்
ஒளிமடந்தை! என்உலகம் அவள்தான் கண்டீர்!

## தேம்பிய குறை!

தின்னும்இதழ் பூரிக்க, நிலாமுற் றத்தில்
சீக்கிரமாய்ப் போயமர்ந்தேன் 'குமுதம்' வந்து,
"என்னஅத்தான் ஊர்ச்சேதி? அம்மா, அப்பா,
எல்லோரும் சுகந்தானா? போன நாளாய்
சின்னஒரு தூக்கம் உண்டா! இருட்டோரத்தில்
தூக்கிஎறிந் தேவிட்டுப் போய்விட் டீர்கள்!
கன்னத்தில் விளக்கேது! சிரிப்பணைத்துக்
காவலுக்குத் தென்றல்வந்து வேலை செய்தாள்!

அரும்பெடுத்தேன் தொடுப்பதற்கு! அதற்குள் அத்தை
ஆருக்கு என்றதும்நான் கூம்பி விட்டேன்
பெரும்படையை முத்தமிடும் வாளை விட்டுப்
புருஷரெலாம் போயேந்தும் பெண்சி ரிப்பில்

கரும்பைத்தான் சுவைக்கின்றார்! நான் உங்கட்
குக்
கருவேலம் பழந்தானே? முந்தா நாளே
வருவதாய்ச் சொன்னீர்கள். அன்பிருந்தால்
மனதுக்கு இறகு முளைக் காதா!" என்றாள்.

'குன்றுக்கும் சிரிப்புண்டு!' என்றேன். "அத்தை,
கண்மூடி விட்டார்கள் அத்தான்" என்று
புன்னகையில் சொல்லிழுத்து, உதடு ஏறிப்
புதுப்பாடம் வாங்குகின்றாள்! அமுத வட்டம்
ஒன்று எழும்! அதில் விழிக்கும்ஈர முத்தம்!
'உந்தும்மணி ஓடை,என்று இதழ்கள் சாய்க்கும்!
தின்றெடுத்தேன் வருவாயை அழகின் ஈடு
சீக்கிரத்தில் துள்ளிவந்து கணக்கில் சேரும்!

"வயிரத்தின் கிழிசலடி உதடு!" என்றேன்.
"வளர்கின்ற செந்தமிழை வாழ்த்த!" என்றாள்,
"பயிர்போன்ற நீள்விழியில் புருக்கள்?" என்
றேன்.
"உயிர்ச்சேதி எடுத்துவரும் பாங்கி!" என்றாள்.
துயரத்தால்; சீழ்பிடிக்கும் மதத்தால்? குட்டைச்
செய்கைகளால் — தேய்ந்துவரும் எளியோர்
கூட்டம்
உயர்கின்றநாள் எந்நாள்? முத்துப் போலே
ஓர்சேதி காதலரே! என்றாள் கேட்டேன்!

"நடுஇரவுச் சிங்கத்தின் வலிமை, இந்த
நாட்டுக்கு மிகவுண்டு! நமது தோளின்

முடிவெல்லாம் கொக்கரிக்கும் வேகம்! வாளின்
முகமெங்கும் விஷக்கனலின் பாய்ச்சல்!
போரைக்
கொடுத்துவரும் அதிர்ச்சியிலே உலகே வந்து
குறுக்கிடினும் தூள்! தூள்!! தூள்!!! ரத்தத்
தூள்தான்!
துடிக்கின்ற நம்இளமை — வேங்கைக் கும்பல்
சுடுகாட்டை அமைத்துவிடும் பகைக்கு,என்று

எழுந்திட்டான் ஓர்வீரன்! ஆவேசத்தில்
இறங்கிற்றுப் பட்டாளம்! நெருப் பெடுத்துக்
கொழுந்துசெயும் விழிபறக்க, ரத்த வாட்கள்
கோடுவைத்துக் காட்டிற்றுப் பகையின் மேலே!
அழுந்திற்று ஆர்ப்பாட்டம்! மீட்சி ஏந்தி
ஆடிற்றுப் பேராண்மை!" என்றாள். நானும்
விழுந்தடித்து வருகின்ற கதை சுவைத்து
விடைகேட்டேன் முழுநிலவை! தந்தாள்!
நின்றேன்!

## கரும்பில் கனல் ஏடு

கங்கு கிழிந்த கதிர்விழிச் சிரிப்பை
வரிவா னத்தில் மாற்றி; நெஞ்சைப்
பனிப்ப டுத்தித்தன் பாதச் சிலம்பை
இசையில் இட்டு; ஏடு குளிர்ந்த
கன்னத் தரப்பில் சித்திரக் குழிகள்
கடைந்து; இளமை குழைத்து; மரகத
ஒய்யாரச் சப்பர மெய்த்தோள் விழுங்கப்
போதல் போல, பூங்கொடி அசைந்து

நடந்தாள். அழகு நடந்தது! செவ்வொளி
முன்னே நீந்த, முதிராச் சிரிப்பு
உலுக்கலில் நகர்ந்து ஓடிற்று! சேய்முகம்
உடுத்திய உதடு ஒளிர்கடல்!

— வீணைக்கு

"வளரும் கருத்தை மடித்து மடித்து
கோணல் ஆகிக் குறுகாதே! கேள்:
இரத்தம் நடத்து! விரித்துவை! நெஞ்சை
அகல மாக்கு! நேரே நட்டுவை!
அதிர்ச்சி செய்யடா! ஆயிரங் கோடி
காலம் நீவாழ்! கருத்தில் சுணைபோடு!
ஆண்டை உலகைக் கிழியடா! கரும்பில்,
தேனில், கனல்-எடு! கூன்ல் வானம்,
ஓர்நாள் நிமிர்ந்தது உண்டா? ஓடு!
சாவின் ஓட்டில் தடுக்கி விழாமல்
ஓடடா விரைந்து! ஒடுங்காதே! வாள்
அடியில் வீழ்ந்து கிடக்கும் தோள்களை
அலையவிட் டுப்பார்! இமையின் ஆழம்
இருண்ட சமுத்ரம்! நேரில் கண்டதை
நெஞ்சில் கொடுத்து நோக்கடா! பழமையை
மாற்று! மாற்று!! மாற்றடா!!! இமைப்பில்
ஆற்றல் தொடங்கு! ஆணையிட் டேசொல்!
மதக்களி றேபோ! எதிரியா? கொலைசெய்
வாளில் பிழிந்திடு! மருத்துவம் அதுதான்.
ஒட்டை உளத்தை ஒருசாண் இழுத்துவை!
மேலும் நீட்டி, வளர்ச்சியைக் கூப்பிடு!
எத்தனை விரிவுகள் ஆழ்ந்துபார்!" என்று
தூங்கச் சுளைவாய் சலித்து; உலகின்

கவிதை பிரித்து, கலையின் உச்சியில்,
தேனூற வார்த்துச் சில்லிட்டு ஓடும்
காறு போலக் களிப்பில் நழுவி,
அழகை அரித்து அள்ளும் கார்த்திகை
மாதத் தின்மேல் மணிவளைக் கரத்தைப்
புழங்கினுள். விளக்குப் புதுநாள் தொட்டதே!

# தேன் கூரை

பயில்கின்ற தூக்கம் உன்னைப்
படைத்ததோ முகிலே? நீதான்
வெயிலற்ற சிரிப்போ? நோயோ
குள்ளத்தின் அடைப்போ? சாவோ?
துயரங்கள் அனுப்பிவைத்த
ஓலையோ? கும்பிக் காடோ?
உயரமல்லாத நெஞ்சின்
தாக்கலோ? மதத்தின் ஏடோ?

காக்கையின் கழுத்து வண்ணக்
கருக்கலின் புருவமே! செந்
திக்குளிப் பாட்டுகின்ற
பரிதிக்கு, இதழ்கள் விற்று,
தேக்கரின் முய்உடப்பில்
செந்நிறப் புரட்சி! இன்று

ஆக்கிய சோறு போலே
அதற்குள்ளே வெளுக்கின் ருயே!

ஆருகம், சமணம், கண்ட
அதிர்ச்சியோ மின்னல்? "இந்து
ஓர்யுகம் முதிர்ந்தும் கொஞ்சம்
ஒடிந்ததா குறும்பு" என்று
நீர்வற்றி விட்டா யோநீ!
நிரீஸ்வர மதத்தைக் கண்ட
ஆர்வத்தில் பிறந்த தோஉன்
அழகிய பச்சை மேனி!

மாக்கோலக் கட்டி போன்ற
வானத்தில்; குங்கு மம்போல்
பூக்கின்ருய்! முதல்சந் திப்பின்
பூரிப்பைத் தின்கின் ருய்! பின்
வாக்கிதோ! தங்கச் சிம் போ?
மகரமீன் துள்ளல் தானே?
போக்கிடும் பார்வை, பிள்ளைத்
தொட்டிலோ? ரத்த ஊற்ருே?

நீர்விழுங் கட்டெ றும்பின்
நிழல்போன்ற இலைக்கூட் டத்தை
வாருந்தா மரையைக் கண்டு
வானில்உன் வடிவங் கண்டேன்!
சீர்வைத்துச் சிரிக்கும் தங்கச்
சிரிப்புக்குக் கொழுந்து போலே

யார்வைத்தார் நாமம்? கண்ணே
அதைமட்டும் எனக்குச் சொல்லு

ஓரிழை யாகி விட்ட
பௌத்தம்போல் இளைத்து, பாவுத்
தார்போலே மேடு காட்டிச்
சரிகின்றாய்! ஒட்ட கத்தின்
பேர்போன கூன மேலோடு
பறக்கின்றாய்! பட்டா வைத்துக்
கூர்மைபோல் மின்னு கின்றாய்
சிரிக்கின்றாய்! கூவு கின்றாய்!

அலைகளை அடுக்கி வைத்து
அனுப்புதல் போல, வானில்
கலையாத நடைபி ரிக்கும்
ஈரத்தின் பரப்பே! "வாழ்வை
விலைபோட்டு நடத்து கின்றார்
மாந்தர்கள்!" வறுமை வெப்பம்
கொலைசெய்து விட்ட தென்னை!
மறைந்துகொள் கடலுக் குள்ளே!

இசையவிழ் மணிக் குவட்டின்
இமையேகேள்! இயற்கைக் கூத்தின்
அசைவெலாந் தமிழன்! உந்தன்
அறிவெலாம் கரும்புத் தோற்றல்!
புசிக்காத இளமை யேநீ
போ!போ!!போ!!! மேல்நாட் டாரின்

திசைபார்த்து நடைது வக்கி,
தொழுநோய்போல் முகத்தை மாற்று!

ஏழ்மையின் குமுறலோ நீ
கொட்டிடும் சாரல்? "மக்கள்
வாழ்ந்திடத் தானே இந்த
வையமும்; உணர்வும்" குள்ளம்
'தாழ்ந்துபோ' எனினும், வெற்பின்
தலைக்குமேல் நிமிர்ந்தாய்! ஆனால்
வீழ்ந்திட்டான் மனிதன்! குள்ளம்
வீழ்ந்தது! நீதான் வென்றாய்!

மேய்க்கின்ற ஆதிக் கத்தை
வீழ்த்திடப் 'புரட்சி' ஒன்றே
'தாய்க்குலச் சரக்கு' என்று
சொல்கிறாய் முகிலே! நானும்
ஆய்ந்துதான் பார்த்தேன். உந்தன்
அழகுவில் சண்டைக் கென்றால்
நீயென்னை உணர்ச்சி அம்பாய்ப்
பனிச்சென்று அணைத்துக் கொள்ளேன்!

நடக்கின்ற உதட்டில் ஊறும்
நல்லிசை கேட்க, முல்லை
அடுக்குள்ள கூந்தலில் வண்
டடைபிடந் தால்.நீ ஓடி
வெடுக்கென்று நனைப்ப தாசொல்!
பிடிபடோம் என நினைப்பா?

அடிக்கடி உன்னைத் தானே
சந்திக்கும் கிழிந்த உள்ளம்!

தேர்வைக்கும் சிங்கா ரத்தைத்
தெருவெல்லாம் நிரப்பு தல்போல்;
ஊர்ஊராய் அழுகு வார்த்து
உடையின்றித் திரிகின்றாயே
ஓர்அணுவுக் கேனும் வெட்கம்
எழவில்லை உடம்பில்? பெண்கள்
நீரிலும் தன் அங்கத்தின்
நிலைகாட்டக் கூசு வார்கள்!

நிழலிலே அழுத்தி வைக்கும்
இருட்டுபோல், நீல மொட்டில்
குழிபோடும் வண்டு, நேற்று
கற்றது தமிழை, இன்று
பழச்சுளை இறங்கும் பாடல்
பலப்பல அதற்குச் சொந்தம்!
பிழையிலாத் தமிழி னோடு
பிறந்தென்ன முகிலே நீதான்!

இலவசத் தில் சிரிப்பைத்
தள்ளுதல், அழகின் மேலே
உலவிட வேசி வைக்கும்
உபாயம்! நீ, உணர்வில் லாமல்
மலைமேலே மொய்த்து, நீரை
விதைக்கின்றாய் முத்து முத்தாய்!
விலைமகள் அன்னாள்! வெட்டி
வெறுப்புடன் அங்கே போய்ப்பார்

ஒழுகாத நடத்தை இல்லை
உன்னிடம்! மணிபோல் ஏடு
கிழிக்கின்ற சிரிப்பு இன்னும்
குறையவே இல்லை. சந்தை
வழியிலே போடு கின்ற
வார்த்தைபோற் பேசு கின்றாய்!
சுழிபோட்ட மூளை. நச்சுத்
திரள்காட்டும் சட்டை யேளி!

அடுக்கடுக் காய்ச்சி ரித்து
அலைகின்றாய். கரிசல் நிற்கும்
நடுச்சாமக் குளிரில் மேற்கே
நடந்தாயாம்! மலையி டத்தில்
தொடுப்பாமே கள்ளி? எந்தன்
சுகந்தினைக் கடிதம் போட்டாய்.
நெடுநெட்டிக் கோரையே! உன்
நெஞ்சுக்கு என்ன ஆழம்!

சிங்கத்தின் பிடரி போன்ற
சோளத்தின் பட்டுக் குஞ்சு
அங்கத்தை, தடித்த காற்று
அதட்டினால் கலைகின் றாய்நீ!
தங்கத்தை ஊது கின்ற
நெருப்பே! நான் இன்பச் சேதி
திங்களன்றே கொடுத்தேன்.
செவ்வாய்தான் அனுப்பி வைத்தாய்!

நலமற்ற மரணச் சேதி
நறுக்கென்று கேட்ப தைப்போல்,
வெலவெலத் தேனே! சேதி
விரித்ததும் சரக்கே இல்லை!
'நிலவிலே விழுந்தி ருக்கும்
அழுக்'கென்று சொல்லிக் கொண்டாய்;
உலவுங்காற் றுடியே கேள்:
'உலகமே இருட்டின் கூளம்!'

அனலுக்கு நீலக் கும்பிப்
புகையுண்டே! படிகம் போன்ற
புனலுக்கு நுரையில் லாமற்
போனதா? புல்லி தழின்
தனதின்றி வாழ்ந்தி ருக்கும்
மலர்உண்டா? கபிலச் சாந்தில்
நனைகின்ற விழிக்கு, கோடி
நொடிப்புகள் பார்த்த தில்லை!

சன்னமாய் எனக்கு வந்த
தகவலால், வீணைக் காடே!
என்னென்ன விதமோ உன்னை
இகழ்ந்திட் டேன். இருட் டிருந்தால்
உன்னதம் வருமா நெஞ்சில்?
உன்கடி தாசி கண்டு,
தின்பண்டம் ஆனேன். என்னைத்
திருடிக்கொள்! நடத்து லோகம்!

'தேன்கூரை' என்று தானே
சொன்னேன் நான்; முகஞ் சுளித்து;

'ஏன்என்னை வைகின் றீர்கள்'
என்கின்றாய். வேண்டு மானால்
'கூன்வளர்க் கும்நி லாவைக்
கேட்டுப்பார்! முகிலே! என்றும்,
நான்கசந் தாலும் எந்தன்
நறுந்தமிழ் அமுதந் தானே!'

தூள்அடிக் கும்காற் றுன்னைத்
துரத்திடப் பறக்கின் றாய். உன்
தோள்சுவை பார்க்கத் தானே
துடிக்கின்றேன். குனிந்து நீவா!
ஆள்தானே நான். எனக்கு,
ஆகாயம் தொடுவ தற்கு
நாள்படாப் புதிய நெஞ்சம்
மிகவுண்டு. கைதான் குட்டை!

# பிரேத ராஜ்யம்

## கொல்லைப்புறத்தில் கோதை:

வஞ்சிஎன்று விடைமக்கும்;
வையத்தின் இரத்தின வாய்,
அஞ்சுகமே' என்றழைக்கும் போது-அவள்
அன்புரைகள் சந்திக்கத் தப்பாது!

தோகை மயில் சாயலிலே
சுந்தரம் எழுதி, விழி
போகும்வழியே நடையை இட்டு - கலையாப்
புதுமையை அழகினிலே தொட்டு

முல்லையிலே ஓர் அழைப்பு;
வண்டருந்தும் தேன் உதட்டில்
நல்லஇசை; நூலிடையில் மின்னல்-திறந்து,
இமைக்கும் தேன் பாதிரிப்பூக் கன்னல்

கொல்லையிலே, தென்றல் விடும்
கூவலிலே, ஏடு விழும்
வெல்லஅந்தி நேரம்; நிழலின் ஈரம்-பார்த்து
வஞ்சி குளிர்ந்தாள் சிரிப்பின் ஓரம்.

## தையலாருடன் தாயின் விளையாட்டு

தேய்ந்திருக்கும் மெய்யுடம்பில்
தெம்புவந்து ஓட்டுதல் போல்

ஓய்ந்தசெயல் மீதுவிழும் ஊக்கம்; - தாயின்
உறைக்கின்ற நெஞ்சைப் புனலாக்கும்!

சுற்றி,யானைத் தோல்நி றத்துத்
திண்ணையிலே, பெண்க ளுடன்
வெற்றிலையை வாயில்ஏ ற்றிக் கொண்டு -
உதட்டை
விடுகதை பிடிக்கவிடல் உண்டு.

தின்றுதின்று அச்ச விப்பைத்
தந்ததால் கதை விழாவை
அன்றுமட்டும் தூங்கவைத்து விட்டு-சோழி
ஆட்டத்தில் விழுந்தார் புரிபட்டு.

சோழி விளையாட்டிலே
சுருட்டி வைத்த நெஞ்சுதனை
நாழிசென்றும் நேர்ப்படுத்த வில்லை - பேச்சு
நடுவிலே சிரித்துவைப்பார் முல்லை!

## பாய்க்காரனுடன் பாவையர் பேச்சு

பாய்கள் விற்றுக் கொண்டுஒரு
பையன்வந்தான் அந்தப் பக்கம்
தாய்செழித்த காதுஓசை மொள்ளும்!—வாய்
தம்பீவா இங்கே என்று அள்ளும்.

சேந்தும் விழி வீதியிலே
செல்ல், புதுச் சேதிதனை
வந்திவரும் ஆர்ப்பாட்டங் கண்டு - விளை
யாட்டில்விழுந் ததுபல துண்டு!

முறிந்திடாத் தளிப் பருவம்;
முகத்து எழில்; நல்வார்த்தை;
வரிவரியாய்ச் செப்பலிட்டு வந்தான் - தன்
வரவேற்பைத் திண்ணையிலே தந்தான்.

தாய் "படுக்கை வகை எங்கே?
சரச விலைக்கு வருமா?
நாய்கிடக்கு தம்பி இங்கே பாரு - ஒரே
நறுக்கில் விலைபிடித்துக் கூறு"

என்றாள். அங்கே சிலபெண்கள்,
இலவம்பூ வாய் பிரித்து,
"பின்னியது யார் இதனை?" என்பார்-அவன்
புதுப்பார்வை வாரிவாரித் தின்பார்.

தாய்:

"பாய்விரித்துக் காட்டு தம்பி!
பஞ்சு மெத்தை கீழ்பரப்ப,
ஆய்ந்ததுவாய், மெல்லியதாய்த் தேடு-விலை
வார்த்து உருவாக்கலாம் பிற்பாடு"

பாய்க்காரன்:

"பின்னல் இறுக்கும் சிரிப்பு
மங்கையின் கொழுந் துடலைத்
தென்றல்முட்டினும் வருத்தம் செய்யும்! -
படுத்தோர்
சித்ர'உடற் சுகம்'அதனை வையும்!

ஒரு பெண்:

"பூவிலே புரளுகின்ற
பொன்னுடலின் ஆதிக்கம்,
மாவேரைப் போன்றஇந்தப் பாயில் -
வந்தால்
மீளாது சாக்காட்டின் வாயில்!"

தாய்:

"இதைச் சொல்லு? அதுஅங்கே
இருக்கட்டும் என்மகளின்
சதைகரைந்து போனாலும் போகும் -
இது
திகைந்துவிட்டால் எல்லாமே ஆகும்!

விலையின் முனையை இழுத்து
விட்டுக் கொண்டிருக்க, வீட்டுத்
தலைமகளின் கொல்லை 'நடை தாண்டல்' -
வந்து
சஞ்சரிக்கும் இருட்டுலகக் கூண்டில்!

## அஞ்சுகத்திடம் அன்னையின் கொதிப்பு:

"சதங்கை இடும் கொழுஞ்சியடி
தண்டாமலே நடந்து வர
பதம்எங்கே போயிற்றடி உனக்கு? - மயிர்
பிளப்புதிமை இழைத்தாலும் எனக்கு!

போடிஅங்கே? அடுக் களையில்
போட்டது போட்டே கிடக்க,

வேடிக்கைக்குக் கண் அனுப்ப என்ன? - மண்
வீடுகட்டும் பேதையா நீ பெண்ணே!

மூட்டுவிடாப் பூக்கள், ரத
வீதியிலும் திரிந்திடலாம்!
கூட்டுக்கிளி நீ! நகத்துக் கீறல், - இம்மி
கடந்தால் நம் தாழ்த்திக்கது ஊறல்!

"மூச்சு விதைக்காதே!" என்று
மூண்டதழல் ஊற்றி, வெளிப்
பேச்சுத்தொடுக்க விரைந்து வந்தாள் -
திண்ணைப்
பெண்களுக்குச் சிலபேச்சுத் தந்தாள்!

ஒருத்தி:

"வண்ணம் இல்லையே ஐயா?
வஞ்சி நத்து வாளா?—"

பாய்க்காரன்:

"—உங்கள்
கன்னம், இதழ், இதில் அழுந்தும் போது -
அந்தக்
கறையழகா காட்சிக்குப் போதாது!"

"இருள் விழுந்து விட்டதம்மா!
இளைப் பருந்த நேரமில்லை;
சுருள்படுத்தும் தாம்பூல ஈடு - போலே
தாங்கும் அடக்கம் லாபத்தோடு

பத்துப்பணம் வந்தால் இந்தப்
பாய் பிரியும்! 'தஞ்சையிலே'
முத்துமுத்தாய் எண்ணிவாங்கிக் கொண்
டேன் - இந்த
வீட்டில் எதும் அதிகவிலை தண்டேன்."

மழைக்கூந்து:

வானதிர, தங்கத் திலே
வளரும்வரி மின் இறங்க,
தேன் கறக்கும் வாயிழையார் தங்கள் - வீடு
சென்றுவிட்டார்; எழுந்தது மங்கல்!

சிங்காரக் கடலின் தேமல்
இடுப்புபோல், முதிர் இருட்டுத்
தொங்குகின்ற மேகம்;குளிர் பிட்டு — மழை
சித்தரித்துக் காட்டிற்று வாய்
தொட்டு!

தாயின் விருந்து:

"பப்பரிக்கும் இம்மழையில்
பயணம் வைத்தால் உன் உடம்பு
உப்புவிட்ட பாலைப்போலே ஆகும் - இங்கே
உறங்கிஎழுந் தால்மழையும் போகும்!"

வயதிலே இளமை! கனி
வாய்க்கு நல்ல துணை தம்பி!
அயலில்தானே உந்தன் ஊரு என்ன? பெயர்
அளிப்பாயா எனக்குநீ முன்னே!"

பாய்க்காரன்:

“கிரையூரின் மூக்கில் ஏறி,
கொம்புபோல் கிடக்கும் ஆற்றின்
ஓரம்வந்தால் தோன்றும் நிலக்கூறு - அந்த
ஊருக்கு ‘மருதூர்’ எனப்பேரு!

‘விடங்கன்’ என்று கூப்பிடுவர்.
வெந்தய நிறத்துக் கப்பித்
தடம்அலைந்த பாதம்நோகு தம்மா - ஒன்றும்
தின்னுமலே தூங்குகிறேன் சும்மா”

தாய்:

“கொஞ்சம்புசி அப்பா! மழை
கொக்கரித்துக் கொட்டு துபார்!
நெஞ்சுங்குளிரும்; அமைதி வேகும் -
உண்டால்
நிற்கும் எல்லாம்! வெதவெதப்பு ஆகும்.

ஏழைநாங்கள் தம்பி! ஏதோ
இருப்பதுதான் அமுதம்! இந்த
வாழைஇளம் பிஞ்சிக்கூட்டு கைப்பா? -
கிழங்கு
மசியலுக்கு என்ன? பாகம் தப்பா?

முற்றிய தயிர் இரவில்
வேண்டுதல் தகாது; கீரை
வற்றலுண்டு; வேண்டியதைக் கேட்டு -
வயிற்றை
வஞ்சனை பண்ணுமலேநீ தீட்டு!”

காற்ற மைக்கக் கைவிசிறி;
  களிசெய்த தேன் அடிசில்,
சேற்றில்கிடக்கும் ஆரல் போலே - கிடாரந்
  தொக்குஊறு காயை இலைமேலே

குனிந்தபடி பரி மாறிக்
  கொண்டிருந்தாள் அன்னை. உள்ளே,
நனைந்தகொதிப் பாலேவஞ்சி காந்த, -
"முல்லைப்
  பூஉண்டோ" என்றான் சிரிப்பேந்த!

**தாய்:**

"பூஉண்டு! காலத் தால்
  பூத்ததுதான். கண்ணில் அந்த
ஓவியம் விழுந்தால் பறிபோகும்! - இளமை
  சந்தித்தால்புதுப் பாகுகள வாகும்!"

**தையல் எழுப்பிய தங்க நிலவு:**

உச்சி அனுப்பும் மலைமேல்
  ஓட்டும் நிலாப்போல்; குதிர்மேல்
கச்சிதம் எழுதும்முகம் தந்தாள்! - 'அந்தக்
  காமரூபன் அழகிலே விடிந்தாள்!

தடுக்கி விழுந்தான் அழகில்!
  தாவி எடுத்தாள் விழியால்!
நொடிக்குநொடி நூறுவிதம் மாறும்! -
பார்வைத்
  தொடர்ச்சியிலே 'கேள்வி-பதில்'
தூறும்!

தொட்டுக் கிடக்கும் விழிகள்
தாய்நிமிரக் கூடு சென்று
கட்டிவைக்கும் சிட்டிறகைப் போலே-
விளிம்பு
வெட்டும்வாயைத் தூர்த்திடும் தன்னாலே

"தெங்கிருக்கும் பாளை!" என்பான்
"சுவைதம்பி!" என்பாள் அன்னை.
"அங்கிருக்கே தேமதுரம்!" என்பான்-"நாழி
ஆறிவிட்டால் தித்திக்காது!" என்பாள்.

விடங்கன்:

"தொத்தும் மணிக் கிளிக்குத்
தோள்எழுப்பித் தந்திடாமல்
வைத்திருந்தால் மனம்வெந்து சாகும்-
வீணாய்
மொட்டுப்பிரிந்த பசுமை வேகும்!"

பதிவுசெய்த அன்பு கண்டேன்.
பனிச் சிரிப்பிலே, வடியும்
நதிகண்டேன்! ஏன்கோடி வார்த்தை-
அம்மா
நனைப்போம் நாம் தூக்கத்தில் நேரத்தை!

சுவைப்பின் ஆழத்தில் மணிக்குயில்கள்:

மசிகூட்டும் தூக்கம், தாயின்
மணிபூட்ட; சேல் விழியில்
பசிகாட்டிக் கொண்டிருந்தாள் வஞ்சி! -
பறந்து
பாகுஊட்டினான் இதழைக் கொஞ்சி!

வைத்தி ருக்கும் வீணையிலே
வந்து படுகின்ற இசை
மெய்த்தமிழை நத்துவதைப் போலே-
இதயம்
மெய்யறம் வளர்க்கும் விரிவாலே!

அமுதநிலே தொட்டு, மேனி
ஆண்டு வரும்போது, அவள்
குமுதம் பிடிக்கின்ற இதழ்ஏடு- காதல்
கண்டுமுதல் பார்க்கும் கிளிக்காடு!

பலன்விழுந்த காட்டெ ருமைப்
பத்தை வயிற்றைப் போல
நிலத்திலே கிடக்கும் பெரும்பாறை- அதில்
நீண்டவாய் கிழித்துக்கொள்ளும்
தேரை!

எண்ணெ யிட்டுக் கொட்டைமுத்தை
எடுத்தழகு பார்ப்பது போல்
வண்ணநிறப் பாம்புஅதைத் தேடும்-பட
வாய்விரித்து ஊர்ந்துவந்து ஆடும்!

கங்கிலே கிடந்து 'பல
கறைநடைத்தி' ரத்த இதழ்ப்
பங்குபிரிக் கின்றசுவை வேளை! - நஞ்சு
பட்டுக்கரிந்தார் 'வஞ்சி- காளை!'

இருட்டுலகம்! விடு தலையில்
ஏறுகின்ற வாள் உலகம்!
குருத்தில்உடல் இறக்கும் தேரை! பாம்பு!-
சாவின்
மொட்டுக்களித்தன பிரேதக் காம்பு!

# கூடாத இரவு

மணிவரிக் கடல் உயிரின் விரிப்பில்
தாயின் உவகை வடிந்தது!

*　　*　　*

நிலவு வடித்தது இன்பம்! தென்றல்
உலவிக் கொண்டே உலுக்கிற்று மணத்தை!

*　　*　　*

சிலதி; மீனு; சித்திர லேகா;
நீலம்; குமுதம்; நிலாப்பூ; வஞ்சி;
வலக்கரம் போன்ற வண்ணக் குறிஞ்சி;
ஆடி மெளிந்து, அமுதம் திறந்து,
கிண்ணத் தாமரைக் குளத்தில் படியப்
பாடிக் கொண்டே பறந்தனர்!
குளிரி மீனின் கூர்வாய் போன்ற
முள்ளிச் செடியில், விரிந்த பூக்கள்,
கண்ணாடி நீரில் தன்முகம் பார்த்தன!
அல்லிகள் ஆடின! அழகிய பெண்களின்
ஒல்லி இடையின் ஒடிசல்; கூத்து
வழங்கிற்று! குளத்தின் ஒப்பந்த இளமையில்
இழைந்தன கரங்கள்! இங்கும் அங்கும்
தவ்வினர்! முகத்தைச் சந்தனப் பூவின்
ஒவ்வொரு இதழால் ஒதுக்கிக் கொண்டனர்;

மலரினில் முகத்தைச் சாத்தி
மகிழுவர்! அலைகள் நெய்து,
புலர்ந்திடும் பார்வைக் கூட்டம்
போக்குவர்! சேந்திக் கொள்வர்!
அலர்ந்தவாய் அனுப்பிக் கேள்வி
ஆடுவர்! விடைத ராதாள்
உலருவாள்! "ஊமைப் பெண்ணே!"
ஓடடி என்பாள் மீனு!

கூம்பிய நளினப் பூவைக்
கிண்டுவர்! அன்னக் குஞ்சு
தாம்புக்கால் அரவிந் தத்தின்
சதிர்விளை யாட்டு என்று
சாம்பிட இமைகள் தைக்கும்!
சேற்றினில் தவளை கத்தும்!
பாம்புவாய்க் கருநீ லத்தின்
பரப்புதான் குளத்தின் போர்வை!

முகந்துநீர் கொப்ப ளிக்க
முந்துவாள் ஒருத்தி! "பூவே
சுகந்தானு?" என்று கன்னம்
தட்டுவாள் அடுத்தாள்; எந்தன்
அகத்தினைத் திருடும் கள்ளன்
யாரெனக் கேட்டால், "மொட்டே
ஏகத்தாளம் செய்கின்றாயா!
என்னடி 'அம்மா!" என்பாள்.

'வரிப்புறம் இரண்டு' என்று
வளர்த்துவாள் கதையை! வஞ்சி,

சிரித்துப் பின் சொல்வாள்" சீச்சி
சொல்லடி 'அணில்கள்' என்று! "
பெருத்ததோர் மலையை, மீனு
'பருப்பதம்' என்பாள்! 'நீல
அரி'என்பாள் சிலதி! 'சித்ரா'
'அலைகடல்' என் அமைப்பாள்!

தேர்வு நடத்தும் கண்களை அழைத்து
நீர்ப்பூ மேலே நிறுத்தினாள் குமுதம்
ஓடும் மீனை 'விடாதே' என்று
தேடுவாள் சிலதி! சிரிப்பாள் மீனு!
உடும்பின் நாக்கை ஒத்த கேசரம்
தொட்டுத் தேனைச் சுவைக்கும் வண்டை
அடிப்பாள் நீலம்! அலரிப் பூவில்
தடுக்கும் அலையைச் சீய்த்து, அழகை
அழுத்துவாள் தடத்தில்! எழுவாள்
தாமரைத் தேனில் பார்வை கழுவி!
நீரின் நிலையில் நின்று, தமது
ஊரின் சம்பவம் உருவி, பேச்சைப்
பலப்பல மாதிரி பறித்தனர்! நாவில்
கலைச்சொல் ஆக்கம் விழித்தது! கத்தி
விழிதயா ரித்த விளைச்சலில், விளக்குப்
புழுதி எழுந்து போனது எங்கும்!
சிரிப்பு நடந்தது! தீந்தமிழ் உதட்டின்
புரிகளைச் சிக்குப் படுத்தாத 'குறிஞ்சி'
பச்சையில் வைத்தாள் பார்வையை! 'வஞ்சியும்'
அச்சுப்போல் அங்கே அழுந்தினாள்!
வண்ணக் குறிஞ்சியின் வாடாக் குறிப்புகள்

அண்ணல் ஒருவன் அருகில் நீண்டது!
சாகசம் பிடிக்கும் இதழால், "சோலை
போகிறேன் பூக்கள் பறிக்க" என்றாள்!
அமைத்தனர் விடையை! எல்லாப் பெண்களும்
சுமைக்குளிர் தூக்கிச் சென்றனர் காடு!

*  *  *

பூக்கள் குவித்தனர் பெண்கள்! குறிஞ்சியும்
தேங்கிய மடை, நடை வாங்குதல் போல
விரைந்து, விரைந்து, எழுச்சியில் துள்ளி,
விசாலத் தாலே, விழுங்க-அமுதின்
ஊற்றுக் கண்ணில் மழைக்கடல் தோண்டி
சர்க்கரைத் தாக்கலில் தடுக்கி விழுந்து!
தக்க விதத்தில் - சுவைத்து - அவனுடன்
கழிக்காத கரும்பு அறுவடை குவித்தாள்!

*  *  *

'என்னடி சிலதி இன்னும் குறிஞ்சியைக்
காணோமே ஏனடி? காடுதான் தின்றதா?
முல்லைப் பூவில் மூழ்கிவிட் டாளா?'
என்ற மொழிகளை இருவரும் கேட்டனர்.
"வருகிறேன்" என்றாள்: வாடாத மலரில்
ஒருதரம் அழுந்தி, "ஓடிப்போ மயிலே!"
என்றுதொடுக்கும், இவனிதழ்ச் சிரிப்பு,
அன்று பூத்த அழகிய தாரகை!
குளத்துக் கரைக்குக் கூவிப் பறந்தனள்
கோதை வண்ணக் குறிஞ்சி!
ஒவ்வோர் பூவின் கதையைப் பேசி
செவ்வாய் வகுத்த சிரிப்புடன், பெண்கள்
அழகைப்பிடித்து எழுந்தனர்! குறிஞ்சியும்
பழகிய விருந்தை நினைவில் தொட்டு
"சுடாத இரவு" எனநடந் தாளே!

# குதிரை யாமம்

கருநீல வானத்து அரங்கில் கூத்திடும்
துளிதாங்கு முகில்கள், சித்திரக் குளிரை
மலையில் ஊற்றின! வாழைக் குருத்து
வடிவம் போல வளரும் அருவி;
விரைந்து தன்னிடம் வருகின்ற நீரை
மடியில் வாரிச் செழித்தது!

கோடை வளர்த்த, தடுப்பை எல்லாம்
மழையின் வளத்தால் கழித்து; பனியில்
எடுப்பாய்ச் சிரிக்கும் அரசிலை மேலே
அலையும் நரம்புகள் போலக் காட்டு
ஆறு நடந்தது! அருவியும் தன்கை
நீட்டி அழைத்தது! சிவந்த வெள்ளத்து
முகமெலாம் திருமணம்! அகத்தில் பளிச்சிடும்
தோட்டத்துச் சிரிப்பால் தொட்டு, மேனியைக்
கூட்டி முடிந்து குதித்து ஓடின.

சுழிந்தபச் சாப்பைத் திருகி, புழுதியை
மிச்சம் இடாமல் உரித்து; விரைவாய்த்
தக்க நேரத்தில் சகாயந் தேட
கொக்கிக் காற்று குனிந்தது! பழுப்புகள்
அக்கரையாக அதன்மேல் குதித்தன!

அதிரும் உலகில் நெறிதேய்ந்த மக்களின்
ஆணைபோல் வைர மின்னல் ஆடிற்று!
வடுவை நிறுத்தும் மரகதக் கொப்பில்
குங்குமம் இழுக்கும் கொழுந்துகள்; இடியால்
கொதும்பின! ஊதலால், கூட்டுப் பறவைகள்
அதுங்கின! காதல் எச்சரிக் கும்இதழ்,
பதுங்கிற்று வஞ்சியின் பவளக் கரைகளில்!

சிக்காறக் கிடந்த நீண்ட உலகம்
ஒடுங்கி ரணத்தில் உறங்கிற்று!
மணிக்கூரை வேய்ந்த வீடும், மாடமும்,
அணிலின் முதுகுபோல் ஆயின அன்று!

பொன்தாழ் அருவிப் புனல்அசை கின்ற
பாதையில் ஓர்குடில்! ஊதையால் நடுங்கும்
பிரேதச் சாவடி! பிள்ளை வண்டின்
சித்திரக் கூடு தேன்கலந்த உடனே
பொத்தல் காட்டுதல் போல, அந்தக்
குடிசையின் அங்கம் காணப்பட்டது.

ஒழுக்கு அறிந்து பழுதுகள் துவட்டி,
குழந்தைக் குவியலைக் கோலி, கூடு
அமைத்துத் தானும், நொடிக்கும் இமைகளைக்
குவித்து முடிந்து தூக்கம் பெய்தாள்!

மூச்சு விடாமல் வழியுங் குளிரில்
சில்லரிச் சிலம்பு புலம்புதல் போல,
காசுகே ளாதே கத்தும் தவளையின்
ஆட்சி நீண்டது! அந்நேரத்தில்
கூரையின் மூக்கில் குளிர்ந்த முத்தை
வார்த்து நேரம் வளர்த்தது அந்தரம்!

ஊதை திரும்பும் வீட்டில்! மூச்சை
வேது பிடிக்க விரைவான் பையன்.
கூடல்வாய் வளர்க்கும் வாடாச் சொட்டுகள்
ஓலையில் தடுக்கி மேலே உதிர்ந்ததால்
தூக்கம் எழும்பித் துணைவிழி இரண்டையும்
தாக்கிற்று! இல்லமே சிலிர்த்தது!

தேம்பிற்று இளமை! சிறுமி தரைஉந்தி
வறுத்த மொச்சையின் வாயைப் போலக்
குளிரிதழ் நீவிக் கொட்டாவி அனுப்பினுள்.

மீண்டும் அமைத்த தூக்கம் பார்வைக்
கூண்டில் நுழைந்து குளித்தது !
நொச்சிப் பூ உதிர் கபில வண்ணத்துச்
சுருளும் இருட்டில், முடங்கிக் கிடந்தன
பச்சைக் குழந்தைகள்! தீய கனவின்
வரிகளை உதடு வரைந்திட அன்னை
பொருந்தாது கொஞ்சம் புரண்டாள், மூலையில்
கிடந்த விளக்குத் தண்டில் முகம்விழ,
உலராத காயம் நனைந்தது அழுகில்!
இந்தத் தீங்கை இழைத்தது எதுவென
கைவிளக் கேற்றிக் காணுவ தற்குத்
தேடினுள் தீபம்! திரும்பினுள். வாயின்
நுனியில் முளைத்த அசதி, அவளைக்
கவிழ்த்தது கீழே! கூடல் முகட்டின்
மேலோர் சத்தம் விரிந்தது! மெதுவாய்க்
காதை அழைத்தாள். கண்கள் ஓடின!
"சரசர" என்னும் சத்தம், முடுக்கில்
புடை புடைத்து-நகர்ந்தது! கோதையின்

உள்ளம் இறுகி, உதட்டின் உச்சி,
தள்ளாட் டத்தில் கட்டுத் தளர்ந்திட,
விளக்கைத் தேடும் வஞ்சியின் கரங்கள்
துடைப்பக் கட் டையின் இடுப்பைக் கௌவின!
சிறுசிறு அசைவுகள் பெருக, நினைவுகள்
பலப்பல விதமாய்ப் படையெடுத் தாடின!
இழைவிளக் கின்றி இடிந்தாள்! குழந்தைகள்
மழையில் நனைந்ததை நெஞ்சில் முடிந்தாள்.

மின்னல் விரிந்தால் விளக்கே வேண்டாம்!
அப்போது வீட்டிற் கதுவும் இல்லை.

மெதுவாய்க் கதவின் வாய்நீக்கி, திண்ணை
விளக்கு மாடத்தில் விழுந்தது அவள்கரம்!
கண்கள் புழுங்கின கூண்டில். நெஞ்சம்
எண்ணெய் வர்த்தியில் எழுந்தது! கீழே
கவனிக்க வில்லை. கால்தடு மாறி,
கணவன் மேலே கவிழ்ந்தாள். கணவன்
முணுமுணுத் தெழுந்து "மூதேவி என்னடி
ஆள்படுத் திருக்கிறேன் அணைந்ததா உன்விழி?"
என்று, எரிந்து கொண்டே எழுந்தான்.

"நீங்களா இங்கே நித்திரை இடுவது?
இந்த மழையில் எப்படி வந்து
சேர முடிந்தது? சேற்றில் ஊறிய
எருமைப் பத்தைப்போல் ஒருவண்டி சகதி
இருந்திட, மாடுபோல் வருமா தூக்கம்!
எழுங்கள் உடனே! முழுநெருப் பெட்டி
இன்றுதான் வாங்கி எங்கோ தொலைத்தேன்.

வெளிச்சம் வேண்டும். வீட்டின் உள்ளே
'சரசர' வென்று வந்த ஓசையை
மின்போல் எழுந்து என்ன என்று
பார்க்க வேண்டாமா? பச்சைக் குழந்தை
என்ன ஆனதோ? எழுங்கள் எழுங்கள்''
என்றாள் மனைவி.

—ஒய்யாரம் குறித்து,

''ஒன்றுமில்லை! உன்மன திப்படி
அச்சத் தாலே அதிரலாம் கண்ணே!
சற்று முன்னே, சுண்டெலி ஒன்று
என்மேல் தாவி எழுந்தது! வீட்டின்
உள்ளே வந்து சன்னை வைத்து
இருக்கலாம்! இந்த வருத்துங் குளிரில்
தனியாய்ப் படுத்தல் தகுமா கரும்பே?
ஊர் உறைந்து ஒடுங்கிக் கிடக்கும்
இந்த வேளை தான் இனிப்புக் குரியது!''
என்றான்.

— அந்த இளந் தமிழச்சி
பேச்செடுக் காமல், பின்னட்ப் பவைகளைத்
தன்பொறுப் பாக்க, கலைந்த அமைதி
அழகு பிரிக்க, அரும்பாய்ச் சிரித்து;
தாண்டாத வில்விழிச் செங்கண் பாண்டியன்
தாழைமோத் தைத் தோளில் பூத்து;
வெட்சிப்பூ மேலே விளையாடும் அலரிபோல்
வரவுபார்த் திருக்கும் திருநாள் இதயத்துக்
குளிர்ந்த உதட்டில் மணிவாய் பாய்ச்சி
''சஞ்சரிக்கும் இன்பச் சரக்கே!'' என்று
வாரினாள் அவனை வாழ்த்தி!

பசலை வானத்து நிசியில் வடிந்த
கண்பனி எடுத்துக் களிப்பில் வைத்துச்
"சீதப் புனலின் சுனையோ" என்று
சந்தனச் சுவடிக் கன்னத்தை இதழ்கள்
உழுதிட, சித்திரப் பழச்சாற்றுப் பரப்பில்
ஊன்றினான் இன்பம்! விளைந்தாள்! இருமுகம்
இரண்டு நிலவு! ஈரைந்து பூக்கள்!
பாகு பொதிந்த பவளவாய்க் கிழிசல்
மணிநீர் அள்ளும் தாமரைக்காடு!
மைதான விழிகள் மலர்ந்தன! விழுதுக்
கையில் மெய்யேறக் கலந்தனர்! கொஞ்சம்
வையத் தொடங்கிற்று மணப்பேச்சு! குடும்பம்
செய்து கொண்டன திருவிழா "இச்சுகள்!"

* * *

பூத்து,அமையாத பூவொன்று சொல்லி
சாத்துவான் வாயை! நங்கை சிரித்து
"நல்ல தமிழன் இசைக்கும் பாடல்
வெல்லம்! இதழின் மணிச்சுளை!" என்பாள்.
"தேன்வரை கின்ற சிங்கார உலகின்
அசையா நெஞ்சம் அழகின் தேக்கம்!
சுருண்ட நினைவுகள் மதத்தின் பிரசவம்!
இல்லையா கண்ணே!" என்பான். ஒப்புவாள்.
செவ்வை கொடுக்கும் சங்கக் கவிதை
ஒவ்வொரு கூத்தாய் விழுந்தது! –
"திரும்படி" என்று சிரிப்பான். குங்குமக்
கரும்பின் தெளிவே வாழ்க என்று
வாழ்த்து நகர்த்தி மகிழும் பூங்கோதையின்
பலாப் பழத் திமுகப் படையலின் குளிர்தழ்
வதங்கலில் ஊாத வாதாம் பழங்கள்.

"இதழ்கள் எங்கே?" என்பாள் வஞ்சி!
வரவு கொடுக்க எழும்பும் பாண்டியன்
இரண்டு உதடும் இரத்தினச் சிவப்பு!

திருநாள் செய்து திரும்பும் "செங்கதிர்"
வரிவரி யாகச் சிரித்து; தங்கம்,
முத்துக் கூளம், மரகதக் குப்பை,
பதும ராகப் பட்டுடை, எல்லாம்
வையத் திற்கு வழங்கும் "பரிசுகள்"
என்று தெரிந்தும், இப்படிக் கதிரை,
துன்பம் அடைத்துச் சிறையில் இட்டது
தன்குறை என்று நொந்து, மேகம்,
செம்மைச் சுவட்டில் மாறிக் கொள்ள,
ஒருதரம் நினைவைத் திருத்தி, சூட்டில்
காந்தும் நிறத்துச் சேலை உரித்து
வங்கப் பருத்தி உடுத்து,
வானில் துள்ளி மன்றல் கொடுத்தது!

தொய்யா உலகத்து நுணுக்கம் பெய்து
மெய்யறம் வகுத்து வாழ்ந்தமூ வேந்தரின்
சிங்க ஆதனத்துத் தமிழரசு போல;
தங்கப் புழுதி நிரவலில், செங்கதிர்
கதிர்க்கை ஊன்றி உதித்தான் கிழக்கில்!

கடலின் இடுப்புபோல் கிடந்த, இல்லத்து
மணியிருட் டரசு மாண்டது! இளமை
இறக்கை தெளித்தது! குழந்தைகள் என்னும்
நீலப் புறாக்கள் கூவின மகிழ்ந்து!
நினைப்பைக் கலைத்து, புறாவின் தொகுதியைத்

தங்கமே என்று தழுவிடப் பெற்றோர்
ஓடினர்! இதய வெளியில், புரட்சி
அமைத்தது குளுமை! அமைந்தது நிலவு!
பனிப்பிடித்தேறும் உதய வர்ணத்தைப்
பார்த்தது கருக்கல்! பார்த்த இளைஞரின்,
கக்கரிச் சதையால் கழுவிய சிரிப்பு
தூற்றல் கொடுத்தது! சிட்டுக் குருவிபோல்
ஓசை பறித்து, ஆசை பிழிந்து,
அம்மா வென்று அழைத்தனர்! பெற்றோர்
சும்மா இருப்பரா? தாவினர்! புருக்கள்
ஓவிய மாயின! உலகமும் நகைத்ததே!



# விரைவில் வெளிவரும்

1. 'ஜீவா' —கதைகள்
2. உலக அரங்கு —புதுமைப்பித்தன்
3. 'காமினி' —ஸ்ரீ யோகியார்
4. முல்லைக்கொடியாள் —'விந்தன்
5. 'அருணோதயம்' —'கிட்டு
6. அன்னை —மாக்ஸிம் கார்க்கி
7. சஞ்சலா —M. S. கமலா
8. மாயக் குயில் —'சாரி'
9. 'தரும பூஷணம்' —'ஜீவா'
10. "பலி" —புதுமைப்பித்தன்*

11. LAUGHTER OF BEAU

Rendered into English

BY V. R. M. CHETTIAR, B

[From the Poet Barathi Das,
"அழகின் சிரிப்பு" ]

STAR PUBLICATIONS
Palakarai — Trichinopoly